

# புனித அல்குர்ஆனிலும் ஹதீஸிலும் இடம் பெற்றுள்ள துஆக்கள்

## الدعاء من الكتاب والسنة تاميلي

அல்லாஹ்வின் ஆசியை வேண்டி நிற்கும்

கலாநிதி ஸஈதுப்னு அலி இப்னி வஹ்ப் அல் கஹ்தானி

## புனித அல் குர்ஆனிலும் ஹதீஸிலும் இடம் பெற்றுள்ள துஆக்கள்
## الدعاء من الكتاب والسنة #كتاب تاميلي

அல்லாஹ்வின் ஆசியை வேண்டி நிற்கும் கலாநிதி ஸஈதுப்னு அலி இப்னி வஹ்ப் அல் கஹ்தானி

பக்கம் - 40


شركاء التنفيذ:

المحتوى الإسلامي رواد الترجمة جمعية الربوة دار الإسلام

يتاح طباعة هذا الإصدار ونشره بأي وسيلة مع الالتزام بالإشارة إلى المصدر وعدم التغيير في النص.



Telephone: +966114454900

ceo@rabwah.sa

P.O.BOX: 29465

RIYADH: 11557

www.islamhouse.com

“அல்லாஹ்வுக்கு அழகிய திருப்பெயர்கள் உள்ளன. அவற்றைக்கொண்டே அவனைப் பிரார்த்தியுங்கள். அவனின் பெயர்களை திரிபுபடுத்துவோரை விட்டுவிடுங்கள். அவர்கள் செய்து கொண்டிருந்த வற்றிற்காக அவர்கள் கூலி வழங்கப்படுவார்கள்”. (1)

(அல்லாஹ்) அல்லாஹ் (அல்அவ்வலு)முதன்மையானவன் ( அல் ஆகிரு) இறுதியானவன் (அல்-ளாஹிரு) வெளிரங்கமானவன் (அல் பாதினு) அந்தரங்கமானவன் (அல் அலிய்யு) உயர்வானவன் (அல் அஃலா) மிக உயர்வானவன்

(அல் முதஆலி) மிக உயர்ந்தவன் (அல் அழீம்) மகத்துவமிக்கவன் (அல் மஜீத்) கண்ணியமிக்கவன் (அல் கபீர்) மிகப்பெரியவன் (அஸ்ஸமீஃ) யாவற்றையும் கேட்பவன் (அல் பஸீர்) யாவற்றையும் பார்ப்பவன் (அல் அலீம்) நன்கறிந்தவன்

(அல் ஹபீர் ) நன்கறிந்தவன் (அல்ஹமீத்) புகழுக்குரியோன் (அல் அஸீஸ்) யாவற்றையும் மிகைத்தவன் (அல் கதீர் )சர்வவல்லமையுடயவன் (அல் காதிர்)ஆற்றலுள்ளவன் (அல் முக்ததிர்) திறமைமிக்கவன் (அல் கவிய்) வலிமைகிக்கவன்

(அல்மதீன்) மிகவும் உறுதிமிக்கவன் (அல் கனிய்) தன்னிறைவானவன் (அல் ஹகீம்) ஞானமிக்கவன் (அல் ஹலீம்) சகிப்புத்தன்மைமிக்கவன் (அல் அபுவ்) மன்னிப்பவன் (அல் கபூர்)மிகப் பெரும் மன்னிப்பாளன் (அல் கப்பார் ) மன்னிப்பை ஏற்பவன்

(அத்தவ்வாப்)பாவமன்னிப்பை ஏற்றுக்கொள்பவன் (அர்ரகீப்) கூர்ந்துஅவதானிப்பவன் (அஷ்ஷஹீத்)மிகப்பெரும் சாட்சியாளன் (அல் ஹபீழ்) பாதுகாப்பபாளன் (அல்லதீப்) நுட்பமானவன் (அல் கரீப்) அருகிலுருப்பவன் (அல் முஜீப்) பதிலளிப்பவன்

(அல்வதூத்)இரக்கமுள்ளவன் (அஷ்ஷாகிர்) நன்றியுடையவன் (அஷ்ஷகூர்) மிக அதிகம் நன்றி பாராட்டுபவன் (அஸ்ஸய்யித்)அதிகாரமிக்க தலைவன் (அஸ்ஸமத்) எவ்விதத்தேவையுமில்லாதவன் (அல் காஹிர்) அடக்கியாள்பவன்(அல் கஹ்ஹார்) மிகப்பெரும் அதிகாரம் செலுத்துபவன் (அல் ஜப்பார்)அடக்கியாள்பவன் (அல் ஹஸீப்) விசாரனை செய்து தீர்ப்பளிப்பவன் (அல் ஹாதி) நேர்வழி காட்டுபவன் (அல் ஹகம்) தீர்ப்பளிப்பவன் (அல் குத்தூஸ்) அனைத்துக்குறைகளைவிட்டும் மிகத்தூய்மையானவன் (அஸ்ஸலாம்)சாந்தியளிப்பவன் (அல் பர்ரு) பேருபகராம் செய்பவன்

(அல் வஹ்ஹாப்)பெருங் கொடையாளன் (அர்ரஹ்மான்) அளவற்ற அருளாளன் (அர்ரஹீம்) நிகரற்ற அன்புடையோன் (அல் கரீம்) சங்கை மிக்க தயாளன்(அர்ரஊப்) மிகவும் இரக்கமுடையவன் (அல்பத்தாஹ்) அருள் வாயில்களை திறப்பவன்

(அர்ராஸிக்) வாழ்வாதாரத்தை அளிப்பவன் (அர்ரஸ்ஸாக்) வரையரையின்றி வாழ்வாதாரத்தை அளிப்பவன் (அல்ஹய்யு) நித்திய ஜீவன் (அல் கய்யூம்) நிர்வகிப்பவன் (அர்ரப்பு) இரட்சகன் (அல் மலிக்) தீர்ப்பு நாளின் அதிபதி (அல்மலீக்) அதிகாரம் படைத்த பேரரசன்

(அல் வாஹித்) தனித்தவன் (அல் அஹத்) ஒருவன் (அல் முதகப்பிர்) பெருமைக்குரியவன் (அல் காலிக்) படைப்பாளன் (அல் கல்லாக்) மிகச்சிறப்பான படைப்பாளன் (அல் பாரிஉ) இல்லாமையிலிருந்து உருவாக்குபவன் (அல் முஸவ்விர்) உருவமைப்பவன்

(அல் முஃமின்)அச்சம்தீர்த்து அபயமளிப்பவன்(அல் முஹைமின்) பராமரித்து பரிபாளிப்பவன் (அல் முஹீத்) சூழ்ந்து அறிபவன் (அல் முகீத்)யாவருக்கும் வாழ்வதற்குரிய வற்றை வழங்குபவன் (அல் வகீல்) காரியங்களைப் பொறுப்பேற்பவன் (அல் காபி)அனைத்துப்படைப்பினங்களுக்கும் போதுமானவன் (அல் வாஸிஃ)தாராளத்தன்மைமிக்கவன்

(அல் ஹக்) உண்மையாக வணங்கத்தக்கவன்(அல் ஜமீல்) மிக அழகானவன் (அர்ரபீக்) மிகவும் மென்மையானவன் (அல் ஹயீய்) நாணமுள்ளவன் (அஸ்ஸித்தீர்) குறைகளை மறைப்பவன் (அல் இலாஹ்) உண்மையான கடவுள் (அல் காபிழ்) வாழ்வாதரங்களை தன்வயப்படுத்துபவன்

(அல் பாஸித்) அருளையும் வாழ்வாதாரத்தையும் தாராளமாக வழங்குபவன் (அல் முஃதி) யதார்த்தமாக கொடுப்பவன் (அல் முகத்திமு) முற்படுத்துபவன் (அல் முஅஹ்ஹிரு) பிற்படுத்துபவன்(அல் முபீன்) தெளிவை வழங்குபவன் (அல் மன்னான்) அடியார்களின் நிலையறிந்து தாராளமாக வழங்குபவன் (அல் வலிய்யு) அதிகாரப்பொறுப்பாளன்

(அல் மவ்லா) எஜமான் (அன்னஸீர்) மிகவும் உதவிசெய்பவன் (அஷ்ஷாபீ) நோய்நிவாரணி அளிப்பவன் (மாலிகுல் முல்க்)அரசாட்சிக்குரியவன் (ஜாமிஉன்னாஸ்)மனிதர்களை ஒன்று சேர்ப்பவன் (நூருஸ்ஸமாவாதி வல்அர்ழி ) வானங்களினதும் பூமியினதும் ஒளி (துல் ஜலாலி வல் இக்ராம்) மகத்துவமும் கண்ணியமும் மிக்கவன்

(பதீஉஸ் ஸமாவாதி வல் அர்ழி) வானங்கள் மற்றும் பூமியினை எவ்வித முன்னுதாரனமுமின்றி படைத்தவன் (2)

# பொருளடக்கம்

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பம் செய்கிறேன்

# முன்னுரை

புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியன அவனை புகழ்ந்து அவனிடமே உதவியும் பாவமன்னிப்பும் கோருகிறோம். எமது மனதில் உதிக்கும் தீயவிடயங்களை விட்டும் எமது செயல்களில் பாவமானவற்றை விட்டும் பாதுகாவல் தேடுகிறோம் யாரை அல்லாஹ் நேர்வழியில் செலுத்துகிறானோ அவனை வழிகெடுப்பவன் எவருமில்லை. யாரை அல்லாஹ் வழிதவறச்செய்துவிடுகிறானோ அவனை நல்வழிப்படுத்துபவன் எவருமில்லை. உண்மையாக வணங்கப்படத்தகுதியானவன் அல்லாஹ்வைத்தவிர வேறு யாருமில்லை, அவன் தனித்தவன், அவனுக்கு இணையாக எதுவுமில்லை முஹம்மத் (ஸல்)அவர்கள் அவனின் அடியாரும் திருத்தூதருமாவார் என நான் சான்று பகர்கிறேன். நபியவர்களின் மீதும் அவர்களின் குடும்பத்தார் மற்றும் அவர்களின் தோழர்கள் மறுமை நாள்வரை அவர்களை நல்ல முறையில் பின்பற்றி நடப்போர் மீது அல்லாஹ்வின் அருளும் அவனின் ஸலாமும் அதிகமாக உண்டாவதாக.

இந் நூலானது எனது நூலான (அத்திக்ரு வத்துஆ வல் இலாஜ் மினல் கிதாபி வஸ்ஸுன்னா) என்ற நூலின் சுருக்கமாகும். இப்பெரும் தொகுப்பிலிருந்து பயன்பெறுவதற்கு இலகுவாக துஆக்களை மாத்திரம் வேறுபடுத்தி மேலும் பல துஆக்களையும் பயனுள்ள பல விடயங்களையும் இணைத்து இத்தொகுப்பை தொகுத்துள்ளேன். இத்தொகுப்பானது அல்லாஹ்வுக்காக மிகத்தூய்மையான முறையில் எழுதப்பட்டதாக அமைய வேண்டும் என அல்லாஹ்வின் உயர் திருநாமங்களையும் பண்புகளையும் முன்னிருத்தி அவனிடம் பிரார்த்திக்கிறேன். இதனை ஏற்றுக்கொள்வதற்கு அவனே பொறுப்பாளனாகவும் வல்லமை படைத்தவனாகவும் உள்ளான்.

எமது நபியான முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தார் மற்றும் அவர்களின் தோழர்கள் மறுமை நாள்வரை அவர்களை நல்ல முறையில் பின்பற்றி நடப்போர் மீதும் அல்லாஹ்வின் ஸலாத்தும் ஸலாமும் அருள் வளமும் உண்டாவதாக.

எழுதியவர்

**ஸஊதுப்னு அலி இப்னி வஹ்ப் அல் கஹ்தானி**

ஹி 1408 வருடம் ஷஃபான் மாத்தில் இந்நூல் எழுதி முடிக்கப்பட்டது

## துஆவின் சிறப்பு

அல்லாஹ் கூறுகிறான் : "மேலும் நீங்கள் என்னை அழைத்துப் பிரார்த்தியுங்கள் நான் உங்கள் பிரார்த்தனைகளுக்குப் பதிலளிப்பேன். எவர்கள் என்னை வணங்குவதை விட்டும் பெருமையடிக்கிறார்களோ அவர்கள் இழிவடைந்தவர்களாக நரகத்தில் நுழைவார்கள் என உங்கள் இரட்சகன் கூறுகின்றான்" (4) மேலும் அல்லாஹ் கூறுகிறான் "(நபியே) என்னைப்பற்றி எனது அடியார்கள் உம்மிடம் கேட்டால் நிச்சயமாக நான் அருகிலேயே இருக்கின்றேன் (எனக் கூறுவீராக) பிரார்திப்பவன் என்னை அழைத்தால் அழைப்பவனுக்கு விடையளிப்பேன். எனவே அவர்கள் நேர்வழி பெறும் பொருட்டு என்னையே அழைக்கட்டும் மேலும் என்னையே நம்பிக்கை கொள்ளட்டும்"(5) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள் : துஆ என்பது வணக்கமாகும் உங்கள் இரட்சகன் பின்வருமாறு கூறுகின்றான் "நீங்கள் என்னை அழைத்துப் பிரார்த்தியுங்கள் நான் உங்கள் பிரார்த்தனைகளுக்குப் பதிலளிப்பேன்".(6)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:'நிச்சயமாக அல்லாஹ் மிக வெட்கமுள்ளவன், தயாள குனம் படைத்தவன், தனது அடியான் தன்னிடம் பிரார்திப்பதற்காக உயர்த்திய கைகளை பதிலளிக்காது வெறுமையாக திருப்பிவிடுவதையிட்டும் வெட்கப்படுகிறான்'(7) மேலும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள் : 'ஒரு முஸ்லிம் பாவகாரியத்திற்காகவோ உறவுகளை துண்டிக்கும் வகையிலோ அன்றி அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்கின்ற போது அவனின் பிரார்த்தனை உடனடியாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது அல்லது அப்பிரார்த்தனை மறுமையில் கூலி வழங்குவதற்காக சேமித்து வைக்கப்படுகிறது அல்லது அவன் கேட்ட பிரார்த்தனைக்கு நிகரான தீங்கிலிருந்து அவனுக்கு பாதுகாப்புக்கிடைக்கிறது. இம்மூன்று விடயங்களில் ஏதாவது ஒன்றை நிச்சயமாக அவனின் பிரார்த்தனைக்கு அல்லாஹ் பிரதிபலனாக வழங்குகிறான் என்று கூறிய போது நபித்தோழர்கள் அவ்வாறாயின்

நாம் அதிகம் பிரார்த்தனை செய்கிறோம் என்று கூற அதற்கு நபி (ஸல்) அவர்கள் (ஆம் அதிகமாக இறைஞ்சுங்கள்) அல்லாஹ் மிக அதிகமாக வழங்குபவன் என்று கூறினார்கள்'.

## துஆவின் ஒழுங்குகளும் துஆ ஏற்றுக்கொள்ளப்டுவதற்கான கராணங்களும் (10)

01. (இஹ்லாஸ்) அல்லாஹ்வுக்காக என்ற தூய எண்ணத்துடன் பிரார்த்தனையில் ஈடுபடல்
02. அல்லாஹ்வை புகழ்ந்து பாராட்டி நபியவர்கள் மீது ஸலவாத் கூறி துஆவை ஆரம்பித்து அவ்வாறே(அல்லாஹ்வை புகழ்ந்து நபியவர்கள் மீது ஸலவாத் கூறி) துஆவை முடித்தல்.
03. துஆவை மன உறுதியுடன் கேட்பதுடன் அதற்கு பதில் கிடைக்கும் என்ற உறுதியான நம்பிக்கை கொள்ளல்
04. அவசரப்படாது மன்றாடிக் கேட்டல்.
05. துஆவில் மனதை ஒர் நிலைப்படுத்தல்.
06. செழிப்பான மற்றும் நெருக்கடியான (இன்பமான துன்பமான) எல்லா நிலைகளிலும் துஆக் கேட்டல்
07. அல்லாஹ்விடம் மாத்திரமே கேட்க வேண்டும்
08. தனக்கும் தனது செல்வம் மற்றும் உறவினர், பிள்ளைகள் ஆகியோருக்கு பாதகமாக துஆ கேட்கக் கூடாது
09. துஆவின் போது சப்தத்தை தாழ்த்தி அமைதியாகப் பிரார்த்தித்தல்
10. தனது பாவத்தை ஏற்றுக் கொண்டு அதற்காக பாவமன்னிப்புக் கோருதல். மேலும் அல்லாஹ்வின் தமக்களித்த அருட்கொடைகளை முழுமையாக ஏற்று அதற்காக நன்றி செலுத்துதல்
11. துஆவின் போது இலக்கிய நயத்துடன் அடுக்கு மொழியில் பிரார்த்திப்பதற்கு சிரத்தை எடுத்தல் கூடாது
12. துஆவின் போது மன்றாடி பணிவுடனும் ஆர்வத்துடனும் அச்சத்துடனும் பிரார்த்தித்தல்.
13. பிறரின் உரிமைகளில் அநியாயமாக அத்துமீறி நடந்திருந்தால்

உரிமைகளை மீள செலுத்துவதுடன், பிறருக்கு அநியாயம் செய்திருந்தால் அவர்களிடம் மன்னிப்பு கோரி, தவ்பா செய்து கொள்ளுதல்.

14. ஒரு விடயத்தை மூன்று தடவைகள் கேட்டல்
15. கிப்லாவை முன்னோக்குதல்
16. இரு கைகளையும் உயர்த்திப் பிரார்த்தித்தல்
17. முடிந்தால் துஆக் கேட்பதற்கு முன் வுழு செய்து கொள்ளல்
18. துஆக் கேட்பதில் எல்லை மீறாது இருத்தல்
19. பிறருக்காக பிரார்த்திக்கும் போது முதலில் தனக்காக பிரார்த்தித்துக்கொள்ளுதல் (11)
20. அல்லாஹ்வின் திருநாமங்கள் மூலமும் அவனின் உயர்பண்புகள் மூலமும் வஸீலா தேடுதல் வேண்டும். (அதாவது அல்லாஹ்வின் பெயர்களைப் பண்புகளை கூறி பிரார்த்தித்தல்) அல்லது பிரார்த்திப்பவர் தான் செய்த நல்லமலை முன்னிருத்தி பிரார்தித்தல் அல்லது உயிர் வாழும் ஒரு நல்ல மனிதரிடம் தனக்காக பிரார்திக்குமாறு வேண்டிக்கொள்ளல்.
21. உணவு, பானம், உடை அனைத்தும் ஹலாலானதாக இருத்தல் வேண்டும்.
22. பிரார்த்தனையில் பாவகாரியங்களையோ, உறவுகளை துண்டித்து நடப்பதற்கான விடயங்களையோ கேட்கக் கூடாது.
23. பிரார்த்திப்பவர் நன்மையை ஏவி தீமையை தடுக்கின்றவராக இருத்தல் வேண்டும்.
24. எல்லா வகையான பாவகாரியங்களிலிருந்தும் விலகியிருத்தல்.

## துஆக்கள் ஏற்றுக்கொள்ளப்படும் நேரங்கள் நிலைமைகள் மற்றும் இடங்கள் (12)

01. லைலதுல் கத்ர் இரவில் கேட்கும் துஆ.
02. இரவின் இறுதிப்பகுதியில் கேட்கும் துஆ.
03. கடமையான ஐவேளைத் தொழுகைகளுக்குப் பின் கேட்கும் துஆ.
04. அதான்- இகாமத்திற்கு இடைப்பட்ட நேரத்தில் கேட்கும் துஆ.
05. ஒவ்வொரு இரவிலும் துஆ ஏற்றுக்கொள்ளப்படும் ஒரு நேரம் உண்டு, அந்த நேரத்தில் கேட்கப்படும் துஆ.
06. அதான் சொல்லப்படும் போது கேட்கும் துஆ.
07. மழை பொழியும் போது கேட்கும் துஆ.
08. அல்லாஹ்வுக்காக புனிதப் போரில் ஈடுபடுவதற்கு புறப்படும் நேரம் கேட்கும் துஆ.
09. வெள்ளிக்கிழமையில் உள்ள ஒரு நேரம், அதில் கேட்கும் துஆ. ஜும்ஆ தினத்தில் அஸ்ர் தொழுகையின் பின்னுள்ள இறுதி நேரமே அந்நேரம் என்பது மிக உறுதியான கருத்தாகும் .( இது பெரும்பாலான அறிஞர்களின் நிலைப்பாடாகும்) சில வேளை குத்பா மற்றும் ஜும்ஆத் தொழுகையுடைய நேரமாகவும் இருக்கலாம் என்பது இன்னும் சிலரின் அபிப்பிராயமாகும்.
10. தூய்மையான எண்ணத்துடன் ஸம்ஸம் நீரைக் குடிக்கும்போது கேட்கும் துஆ.
11. ஸஜ்தாவின் போது கேட்கும் துஆ.
12. இரவில் தூங்கி எழும்பும் வேளையில் கேட்கும் துஆ, இது குறித்து ஹதீஸில் வந்துள்ள துஆவை ஓதுதல்.
13. வுழு செய்த நிலையில் தூங்கி பின்னர் இரவில் விழிப்பே ற்பட்டு அவ்வேளை கேட்கும் துஆ.
14. லாஇலாஹ இல்லா அந்த ஸுப்ஹானக இன்னீ குன்து மினல் ளாலிமீன்'- என்று ஓதி விட்டு கேட்கும் துஆ (உன்னைத் தவிர உண்மையான வணக்கத்திற்கு உரிய இறைவன் வேறொருவனும் இல்லை. நீ மிகப் பரிசுத்தமானவன். நிச்சயமாக நானோ

அநியாயக்காரர்களில் ஒருவனாகி விட்டேன்)

15. ஒருவர் இறந்த வேளை அவருக்காக மக்கள் கேட்கும் துஆ.
16. தொழுகையின் கடைசி அத்தஹிய்யாதில் அல்லாஹ்வைப் புகழ்ந்து, நபி (ஸல்) அவர்களின் மீது ஸலவாத்து ஓதியதற்குப் பின் கேட்கும் துஆ.
17. அல்லாஹ்வின் மகிமை மிக்க பெயரைக் கூறி அழைக்கும் போது பதிலளிக்கின்ற, இறைஞ்சும் போது கொடுக்கின்ற (அல் இஸ்முல் அஃழம்) மகத்தான திரு நாமத்தைக் கூறிக் கேட்கும் துஆ.
18. ஒரு முஸ்லிம் தமது முஸ்லிமான சகோதரனுக்காக மறைமுகமாக கேட்கும் துஆ.
19. அரஃபா தினத்தன்று அரஃபா மைதானத்தில் கேட்கும் துஆ.
20. ரமழான் மாதத்தில் கேட்கும் துஆ.
21. மார்க்க அறிவு கற்பிக்கும் சபைகளில் முஸ்லிம்கள் ஒன்று கூடி இருக்கும் போது கேட்கும் துஆ
22. சோதனை ஏற்படும் போது 'இன்னா லில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன்', 'அல்லாஹு ம்மஃஜுர்னீ ஃபீ முஸீபதீ வ அக்லிப்லீ ஹைரம்மின்ஹா', (நிச்சயமாக நாங்கள் அல்லஹ்விற்கே சொந்தமானவர்கள். அவன் பக்கமே மீளுவோராக இருக்கிறோம். யா அல்லாஹ் எனக்கு ஏற்பட்டுள்ள சோதனைக்கு நற்கூலி வழங்குவாயாக! அதைவிடச் சிறந்ததைப் பகரமாகத் தந்திடுவாயாக) என்று ஓதி கேட்கும் துஆ
23. உள்ளம் அல்லாஹ்வின் பால் ஆகர்சிக்கப்பட்டு மனத்தூய்மை ஏற்படும் போது கேட்கும் துஆ
24. அநீதியிழைக்கப்பட்டவர் அநீதி இழைத்தவருக்கு எதிராக கேட்கும் துஆ.
25. தந்தை தனது மகனுக்குச் சார்பாக அல்லது பாதகமாக கேட்கும் துஆ.
26. பயணத்தின் போது பிரயாணி கேட்கும் துஆ.
27. நோன்பாளி நோன்பு துறக்கும் வரையில் கேட்கும் துஆ.
28. நோன்பாளி நோன்பு துறக்கும் போது கேட்கும் துஆ.
29. நிர்கதிக்குள்ளானவர் கேட்கும் துஆ.

30. நீதியான அரசர் கேட்கும் துஆ.
31. தனது பெற்றோருக்கு உபகாரம் செய்யும் பிள்ளைகள் கேட்கும் கேட்கும் துஆ.
32. வுளூ செய்த பின்னர் ஹதீஸில் வந்துள்ள துஆவை ஓதி கேட்கும் துஆ.
33. ஹஜ்ஜில் சிறிய ஜம்ராவில் கல்லெறிந்ததன் பின் கேட்கும் துஆ.
34. ஹஜ்ஜில் மத்திய ஜம்ராவில் கல்லெறிந்ததன் பின் கேட்கும் துஆ.
35. கஃபாவின் உள்ளே கேட்கும் துஆ. யார் கஃபாவின் ஹிஜ்ர் எனப்படும் அரைவட்ட சுவர்ப்பகுதிக்குள் தொழுதாலும் துஆக் கேட்டாலும் அது கஃபாவின் உள்ளே தொழுததாகவும், துஆக் கேட்டதாகவும் அமையும்.
36. ஸபா மலையின் மீதேறிக் கேட்கும் துஆ.
37. மர்வா மலையின் மீதேறிக் கேட்கும் துஆ.
38. ஹஜ்ஜில் அல்மஷ்அருல் ஹராமில் கேட்கப்படும் துஆ.

ஓர் இறை நம்பிக்கையாளன் எப்போதும் எங்கிருந்த போதும் தனது இரட்சகனிடன் பிரார்த்திக்கின்றவானாக இருத்தல் வேண்டும். ஏனெனில் அல்லாஹ் இது குறித்து பின்வருமாறு குறிப்பிடுகிறான்: (நபியே) என்னைப்பற்றி எனது அடியார்கள் உம்மிடம் கேட்டால் நிச்சயமாக நான் அருகிலேயே இருக்கின்றேன் (எனக் கூறுவீராக) பிரார்த்திப்பவன்(எவரும்) என்னை அழைத்தால் அழைப்பவனுக்கு விடையளிப்பேன். ஆகவே அவர்கள் நேர்வழி பெறும் பொருட்டு என்னையே அழைக்கட்டும் மேலும் என்னையே நம்பிக்கை கொள்ளட்டும் (14) என்றாலும் இங்கே குறிப்பிடப்பட்டுள்ள பிரார்த்தனை ஏற்றுக்கொள்ளப்படும் நேரங்கள், நிலைமைகள், இடங்கள் குறித்த விடயத்தில் கூடிய கவனம் செலுத்த வேண்டும் என்பதற்காக இங்கே விசேடமாக குறிப்பிடப்பட்டுள்ளன.

## புனித அல் குர்ஆனிலும் ஹதீஸிலும் இடம் பெற்றுள்ள துஆக்கள்

புகழனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கு மாத்திரமே உரித்தாகட்டும். ஸலாத்தும் ஸலாமும் இறுதி நபி (ஸல்)அவர்களின் மீது உண்டாவதாக.

01. "அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால் ஆரம்பிக்கின்றேன்" "அகிலத்தாரைப் படைத்துப் பரிபாலிக்கும் அல்லாஹ்வுக்கே புகழனைத்தும். (அவன்) அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன். தீர்ப்பு நாளின் அதிபதி. நாம் உன்னையே வணங்குகிறோம்; உன்னிடமே உதவி தேடுகிறோம்.(இறைவா) எங்களுக்கு நேரான வழியை காட்டுவாயாக நீ அருள்புரிந்தோர் வழியில்(அது உன்) கோபத்திற்குள்ளானவர்களினதோ வழிதவறியவர்களினதோ வழி அன்று" (15)
02. "எமது இரட்சகனே! எங்களிடமிருந்து (எமது பணிகளை) ஏற்றுக்கொள்வாயாக, நிச்சயமாக நீயே யாவற்றையும் செவியுறுபவனும் அறிந்தவனுமாவாய்" (16)
03. "(எங்கள் இரட்சகனே) எம்மை மன்னிப்பாயாக! நிச்சயமாக நீயே மிக்க மன்னிப்பவனும் நிகரற்ற அன்புடையோனுமாவாய்" (17)
04. "எங்கள் இரட்சகனே எங்களுக்கு இவ்வுலகில் நல்லதையும் மறுமையில் நல்லதையும் தந்தருள்வாயாக மேலும் நரக வேதனையை விட்டும் எம்மைப் பாதுகாப்பாயாக" (18)
05. " நாம் செவியேற்றோம் கட்டுப்பட்டோம், எங்கள் இரட்சகனே உனது மன்னிப்பைக் கோருகிறோம். உன்னிடமே மீளுதல் உள்ளது" (19)
06. "எங்கள் இரட்சகனே ! (உமது கட்டளைகளில் நிறைவேற்ற வேண்டியவற்றில் எதையேனும்) நாங்கள் மறந்து விட்டாலோ அல்லது (அவற்றை நிறைவேற்றுவதில்)நாங்கள் தவறிழைத்து விட்டாலோ எங்களைக் குற்றம் பிடிக்காதிருப்பாயாக! எங்கள் இரட்சகனே! எங்களுக்கு முன் சென்றோர் மீது சுமத்திய சிரமத்தைப் போன்று எங்கள் மீது சுமத்தாதிருப்பாயாக! எங்கள் இரட்சகனே! எதில் எமக்கு சக்தியில்லையோ அதை எங்கள் மீது சுமத்தாதிருப்பாயாக! எங்கள் பாவங்களை அழித்து! எங்களை மன்னித்தருள்;வாயாக! எங்கள் மீது

கருணை புரிவாயாக! நீயே எங்கள் பாதுகாவலன்; நிராகரிப்பாளரான கூட்டத்தாருக்கு எதிராக எங்களுக்கு உதவி செய்தருள்வாயாக (20)

07. "எங்கள் இரட்சகனே! நீ எங்களுக்கு நேர் வழியைக் காட்டியபின் எங்கள் உள்ளங்களை (அதிலிருந்து) தடம்புறளுமாறு செய்து விடாதே! மேலும் உன்னிடமிருந்து எங்களுக்கு அருளை வழங்குவாயாக! நிச்சயமாக நீயே பெருங் கொடையாளனாவாய்" (21)

08. "எங்கள் இரட்சகனே! நிச்சயமாக நாங்கள் (உன்மீது) நம்பிக்கை கொண்டோம்". ஆகவே எங்கள் பாவங்களை மன்னித்து நரக வேதனையை விட்டும் எம்மைப் பாதுகாப்பாயாக (22)

09. "என் இரட்சகனே உன்னிடமிருந்து எனக்கு ஒரு பரிசுத்தமான சந்ததியை தந்தருள்வாயாக, நிச்சயாமாக நீ பிரார்த்தனையைச் செவியேற்பவனாக இருக்கிறாய் " (23)

10. "எங்கள் இரட்சகனே! நீ இறக்கியருளியவற்றை நம்பிக்கை கொண்டு இத்தூதரை நாங்கள் பின்பற்றினோம்;. ஆகவே எங்களை(சத்தியத்திற்கு) சாட்சி கூறி உன்னை ஏற்றுக்கொண்டோருடன் பதிவு செய்து கொள்வாயாக (24)

11. "எங்கள் இரட்சகனே! எங்கள் பாவங்களையும் எங்கள் காரியங்களில் நாங்கள் வரம்பு மீறிச் செய்தவற்றையும் மன்னித் தருள்வாயாக! எங்கள் பாதங்களை பலப்படுத்தி நிராகரிப்பாளர்களான இக்கூட்டத்தாருக்கு எதிராக எங்களுக்கு நீ உதவி புரிவாயாக (25)

12. "எங்கள் இரட்சகனே! இவற்றையெல்லாம் நீ வீணாகப் படைக்கவில்லை, நீ தூய்மையானவன்; நரக வேதனையிலிருந்து எங்களைக் காத்தருள்வாயாக எங்கள் இரட்சகனே! நீ யாரை நரகத்தில் நுழைவிக்கின்றாயோ அவரை நிச்சயமாக நீ அவனை இழிவுபடுத்திவிட்டாய். அநியாயக்காரர்களுக்கு உதவி செய்வோர் எவருமில்லை. உங்கள் இறைவன் மீது நம்பிக்கை கொள்ளுங்கள் என்று ஈமானின் பக்கம் அழைத்தவரின்(தூதரின்) அழைப்பை எங்கள் இரட்சகனே நாம் செவிமடுத்து நம்பிக்கை கொண்டோம்; எனவே எங்கள் இரட்சகனே எமது பாவங்களை மன்னித்து எமது தீமைகளை எங்களை விட்டும் அகற்றி நல்லவர்களுடன் எம்மை மரணிக்கச்

செய்வாயாக. எங்கள் இரட்சகனே!; உன் தூதர்கள் மூலமாக எங்களுக்கு நீ வாக்களித்ததை எங்களுக்குத் தந்தருள்வாயாக! மறுமை நாளில் எங்களை இழிவுபடுத்தாது இருப்பாயாக! நிச்சயமாக நீ வாக்குறுதிக்கு மாறுசெய்யமாட்டாய்" (26)

13. "எங்கள் இரட்சகனே நாம் நம்பிக்கை கொண்டுவிட்டோம் ஆகவே சாட்சியாளர்களுடன் எங்களையும் பதிவு செய்துகொள்வாயாக" (27)
14. "எங்கள் இரட்சகனே! எங்களுக்கு நாங்களே அநியாயம் செய்து கொண்டோம். நீ எங்களை மன்னித்து எமக்கு அருள்புரியா விட்டால் நிச்சயமாக நாங்கள் நஷ்டமடைந்தவர்களாகிவிடுவோம்" (28)
15. "எங்கள் இரட்சகனே! அநியாயக்கார கூட்டத்தாருடன் எங்களை சேர்த்து விடாதே"
16. "யா அல்லாஹ்! நீயே எமது பொறுப்பாளன். ஆகவே எம்மை மன்னித்து எமக்கு அருள்புரிவாயாக, மன்னிப்பவர்களில் நீயே மிகச்சிறந்தவன். மேலும் எங்களுக்கு இவ்வுலகிலும் மறுமையிலும் நல்லதையே பதிவு செய்வாயாக" (30)
17. "அல்லாஹ்வே எனக்குப் போதுமானவன். உண்மையாக வணங்கப்படத்தகுதியான இறைவன் அவனைத் தவிர வேறுயாறுமில்லை. அவன் மீதே நான் எனது பொறுப்புக்களை ஒப்படைக்கின்றேன். அவன் மகத்தான அர்ஷின் இரட்சகனாவான்" (31
18. "எங்கள் இரட்சகனே அநியாயக்கார கூட்டத்தாரின் சோதனைக்கு எம்மை ஆளாக்கி விடாதே! மேலும் நிராகரிப்பாளர்களான இக்கூட்டத்தாரிடமிருந்து உனது கருணையால் எம்மைக் காப்பாற்றுவாயாக" (32)
19. "எனது இரட்சகனே எனக்கு எது குறித்து அறிவில்லையோ அது குறித்து உன்னிடம் கேட்பதைவிட்டும் நிச்சயமாக நான் பாதுகாவல் தேடுகிறேன். நீ என்னை மன்னித்து எனக்கு அருள் புரியாது விட்டால் நான் நஷ்டவாளர்களில் ஒருவனாக ஆகிவிடுவேன் (33)
20. "யா அல்லாஹ்! வானங்கள் மற்றும் பூமியை படைத்தவனே, இம்மையிலும் மறுமையிலும் நீதான் எனது பாதுகாவலன். என்னை முஸ்லிமாக மரணிக்கச் செய்து நல்லடியார்களுடன் என்னைச்

சேர்த்து வைப்பாயாக"(34)

21. "எனது இரட்சகனே! (மக்காவாகிய) இவ்வூரை அபயம் அளிக்கக் கூடியதாக ஆக்குவாயாக, மேலும் என்னையும் எனது மக்களையும் சிலைகளை வணங்குவதை விட்டும் தூரப்படுத்துவாயாக"(35)
22. "எனது இரட்சகனே! என்னையும் என் சந்ததியிலுள்ளோரையும் தொழுகையை நிலைநாட்டுவோராக ஆக்குவாயாக. எங்கள் இரட்சகனே!எனது பிரார்த்தனையை ஏற்றுக்கொள்வாயாக(36)
23. "எங்கள் இரட்சகனே! எனக்கும் என் பெற்றோருக்கும் நம்பிக்கையாளர்களுக்கும் விசாரணை நடைபெறும் நாளில் மன்னிப்பளிப்பாயாக"(37)
24. "எங்கள் இரட்சகனே ! உன்னிடமிருந்து எங்களுக்கு அருள்களை வழங்கி எமது காரியத்தில் நேர்வழியை எமக்கு எளிதாக்கித் தருவாயாக!""
25. "எனது இரட்சகனே ! எனக்கு என் உள்ளத்தை நீ விரிவுபடுத்தி வைப்பாயாக! என் காரியத்தை எனக்கு இலகுபடுத்திவைப்பாயாக! நான் கூறுவதை மக்கள் புரிந்து கொள்ளும் பொருட்டு என் நாவில் உள்ள முடிச்சுகளை அவிழ்த்து விடுவாயாக! "(39)
26. "என் இரட்சகனே !அறிவை எனக்கு அதிகப்படுத்தித்தருவாயாக!"(40)
27. "உன்னைத் தவிர உண்மையான வணக்கத்திற்கு உரிய இறைவன் வேறொருவனும் இல்லை. நீ மிகப் பரிசுத்தமானவன். நிச்சயமாக நானோ அநியாயக்காரர்களில் ஒருவனாகி விட்டேன்" (41)
28. "எனது இரட்சகனே ! (சந்ததியற்ற) தனித்தவனாக என்னை நீ விட்டு விடாதே! நீயே வாரிசு அளிப்போரில் மிகச்சிறந்தவனாவாய்" (42)
29. ".எனது இரட்சகனே ! ஷைத்தான்களின் தூண்டுதல்களிலிருந்து நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். மேலும் எனது இரட்சகனே அவை என்னிடம் வருவதைவிட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்" (43)
30. எங்கள் இரட்சகனே! நாங்கள் (உன்னை) நம்பிக்கை கொண்டோம். ஆகவே எம்மை மன்னித்து எங்களுக்கு அருள்புரிவாயாக! அருள்புரிவோரில் நீயே சிறந்தவன்".(44)

31. “எனது இரட்சகனே ! (என்னை) நீ மன்னித்து அருள்புரிவாயாக! நீ அருள்புரிவோரில் மிகச் சிறந்தவனாவாய்“(45)
32. “எமது இரட்சகனே ! நரக வேதனையை எங்களை விட்டும் நீ திருப்பிவிடுவாயாக! நிச்சயமாக அதன் வேதனை நிரந்தரமானதாகும். நிச்சமயமாக அது வாழ்விடத்தாலும் தங்குமிடத்தாலும் மிகக்கெட்டதாகும்” (46)
33. “எங்கள் இரட்சகனே ! எங்கள் மனைவியர் மூலமும் எங்கள் சந்ததிகள் மூலமும் கண்குளிர்ச்சியை வழங்குவாயாக! எம்மை பயபக்தியாளர்களுக்கு முன்மாதிரிமிக்கவர்களாகவும் ஆக்குவாயாக”(47)
34. “என் இரட்சகனே! எனக்கு அறிவு ஞானத்தை வழங்கி என்னை நல்லோர்களுடன் சேர்ப்பாயாக. பின்வருபவர்களிடம் எனக்கு நற்புகழை ஏற்படுத்துவாயாக! அருள் நிறைந்த சுவர்க்கத்திற்கு உரித்துடையோரில் என்னையும் ஆக்குவாயாக” (48)
35. “"(என் இரட்சகனே!)படைப்பினங்கள் எழுப்பப்படும் நாளில் என்னை நீ இழிவுபடுத்தி விடாதே! அந்நாளில் செல்வமோ பிள்ளைகளோ பயன்தராது. ஆயினும், பரிசுத்த உள்ளத்துடன் (தன் இறைவனாகிய) அல்லாஹ்விடம் வருபவர்தான் (பயனடைவார்)”49.
36. “எனது இரட்சகனே! நீ என் மீதும், என் பெற்றோர் மீதும் செய்த அருட்கொடைகளுக்கு நான் நன்றி செலுத்துவதற்கும், நீ பொருந்திக்கொள்ளும் நல்லறத்தை செய்வதற்கும் எனக்கு அருள்புரிவாயாக! உனது அருளால் உனது நல்லடியார்களுடன் என்னையும் சேர்த்து விடுவாயாக”(50)
37. “எனது இரட்சகனே! நான் எனக்கே அநியாயம் செய்து கொண்டேன். ஆகவே என்னை மன்னித்தருள்வாயாக!” (51)
38. “எனது இரட்சகனே! அநியாயக்கார கூட்டத்திலிருந்து என்னை காப்பாற்றுவாயாக!” (52)
39. “எனது இரட்சகன் என்னை நேரான பாதையில் செலுத்தப் போதுமானவன்”(53)
40. “எனது இரட்சகனே! நீ எனக்கு இறக்கியருளும் நல்லவற்றின்பால்

நிச்சயமாக நான் தேவையுள்ளவனாக இருக்கின்றேன்" (54)

41. "எனது இரட்சகனே! குழப்பம் விளைவிக்கும் கூட்டத்தாருக்கு எதிராக எனக்கு உதவி செய்வாயாக" (55)
42. "எனது இரட்சகனே நல்லோர்களில் இருந்து(ஒருவரை) எனக்குத் (சந்ததியாக) வழங்குவாயாக!" (56)
43. "எனது இரட்சகனே ! நீ என் மீதும் என் பெற்றோர் மீதும் செய்த உன் அருட்கொடைகளுக்கு நான் நன்றி செலுத்துவதற்கும், நீ பொருந்திக்கொள்ளும் நல்லறத்தை செய்வதற்கும் எனக்கு நீ அருள்புரிவாயாக! எனக்கு என் சந்ததியை சீர்படுத்துவாயாக! நிச்சயமாக நான் உன்னிடம் பாவமன்னிப்புக் கோரி மீண்டுவிட்டேன். நான் முற்றிலும் வழிப்படும் முஸ்லிம்களில் உள்ளவனாவேன்". (57)
44. "எங்கள் இரட்சகனே ! எங்களையும் நம்பிக்கை கொள்வதில் எங்களை முந்திவிட்ட எமது சகோதரர்களையும் மன்னிப்பாயாக! மேலும் நம்பிக்கைகொண்டோர் குறித்து எமது உள்ளங்களில் குரோதத்தை ஏற்படுத்தி விடாதே! நிச்சயமாக நீ மிக்க இரக்கமுடையவனும் நிகரற்ற அன்புடையவனுமாவாய்"(58)
45. "எங்கள் இரட்சகனே! உன்மீதே நாங்கள் முழுமையாக நம்பிக்கை வைத்து விட்டோம்.மேலும் உன்னிடமே மீண்டு விட்டோம். உன்னிடமே மீழுதல் உள்ளது" (59)
46. 'எங்கள் இரட்சகனே நிராகரிப்பாளர்களால் சோதனைக்குட்படுத்தப்பட்டவர்களாக எங்களை ஆக்கிவிடாதே! மேலும் எங்களை மன்னித்தருள்வாயாக! நிச்சயமாக நீ யாவற்றையும் மிகைத்தவன் ஞானமிக்கவன்" (60)
47. "எங்கள் இரட்சகனே எங்கள் ஒளியை எங்களுக்குப் பூரணப்படுத்துவாயாக! மேலும் எங்களை மன்னிப்பாயாக! நிச்சயமாக நீ யாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்" (61)
48. "எனது இரட்சகனே என்னையும், எனது பெற்றோரையும், நம்பிக்கையாளராக எனது வீட்டினுல் நுழைந்தவரையும் மேலும் நம்பிக்கையாளர்களான ஆண்களையும் பெண்களையும் மன்னிப்பாயாக (62)

49. யா அல்லாஹ் உனது நாட்டப்படி எந்த சத்தியம் குறித்து கருத்து வேறுபாடு இருக்கிறதோ அதில் நேரான வழியைக் காட்டுவாயாக! நிச்சயமாக! நீ நாடியவர்களுக்கு நேரான வழியைக் காட்டக்கூடியவனாக இருக்கிறாய் (63)
50. "யா அல்லாஹ் யாருக்கு நீ அறிவு ஞானத்தைக் கொடுக்கிறாயோ அவர் அதிக பாக்கியத்தைப் பெற்றவராவார்.அவ்வாறான அறிவு ஞானத்தை எனக்கும் தந்தருள்வாயாக" (64)
51. யா அல்லாஹ் இவ்வுலக வாழ்விலும் மறுமையிலும் உறுதியான வார்த்தையைக் கொண்டு நிலை பெறச்செய்வாயாக"" (65)
52. "யா அல்லாஹ் எங்களுக்கு ஈமானை நேசத்திற்குரியதாகவும், அதனை எங்கள் உள்ளங்களில் அலங்காரமாயும் ஆக்கித்தந்தருள்வாயாக! மேலும் இறை நிராகரிப்பையும், பாவம் செய்வதையும், மாறு செய்வதையும் வெறுப்பானதாக ஆக்கிவிடுவாயாக! மேலும் நேர்வழிபெற்றவர்களில் எங்களையும் ஆக்கிவிடுவாயாக" (66)
53. "யா அல்லாஹ் எனதுள்ளத்தின் கஞ்சத்தனத்திலிருந்து என்னைப் பாதுகாப்பாயாக! என்னை வெற்றியாளர்களில் ஒருவராக ஆக்கிவிடுவாயாக´(67)
54. "யா அல்லாஹ் எமக்கு இவ்வுலகிலும் மறுமையிலும் நல்லதை தந்தருள்வாயாக! மேலும் எங்களை நரக வேதனையைவிட்டு எம்மைப் பாதுகாப்பாயாக (68)
55. "யா அல்லாஹ்! நரகின் சோதனை, நரக வேதனை, கப்ரின் சோதனை, கப்ரின் வேதனை, செல்வத்தின் சோதனையின் தீயவிளைவு, வறுமையின் சோதனையின் தீயவிளைவு ஆகிய அனைத்திலிருந்தும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.இறைவா! மஸீஹுத் தஜ்ஜாலுடைய சோதனையின் தீயவிளைவுகளை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். யா அல்லாஹ்! பனிக் கட்டி மற்றும் பனித்துளி நீரால் என் உள்ளத்தை கழுவி விடுவாயாக! வெண்மையான துணியை அழுக்கிலிருந்து தூய்மைப் படுத்துவதைப் போல் என் உள்ளத்தை பாவங்களிலிருந்து தூய்மைப்படுத்துவாயாக! கிழக்கிற்கும் மேற்கிற்கும் நீ ஏற்படுத்தியுள்ள

தூரத்தைப் போன்று எனக்கும் என் பாவங்களுக்கும் மத்தியில் தூரத்தை ஏற்படுத்துவாயாக! யா அல்லாஹ்! சோம்பல், பாவச்செயல், மற்றும் கடன் ஆகியவற்றிலிருந்து நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன் (69)

56. " யாஅல்லாஹ்! இயலாமை, சோம்பல், கோழைத்தனம், வயோதிபம், கஞ்சத்தனம், கப்ரின் வேதனை மேலும் வாழ்வு மற்றும் மரணத்தின் சோதனை ஆகியவைகளை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்" (70)

57. "யாஅல்லாஹ்! தாங்கமுடியாத பாரிய கஷ்டங்கள் ஆட்கொள்வதை விட்டும், விரும்பத்தகாதவை ஏற்படுவதை விட்டும், தீயமுடிவுகளை விட்டும எதிரிகளின் நகைப்பை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன் (71)

58. "யா அல்லாஹ்! என்னுடைய மார்க்கத்தை எனக்கு நீ சீர்படுத்துவாயாக! (ஏனெனில்) அதுதான் எனது அரண். எனது உலக வாழ்க்கையையும் எனக்குச் சீர்படுத்துவாயாக! (ஏனெனில்) அதுதான் நான் வாழுமிடம். எனது மறுமையைச் சீர்படுத்துவாயாக! (ஏனெனில்) அதுதான் நான் திரும்பிச் செல்லுமிடம். எனது வாழ்க்கையில் அதிக நன்மைகள் புரிவதற்கு வாய்ப்பளிப்பாயாக! அனைத்து தீங்குகளை விட்டும் எனக்கு விமோசனமானதாக எனது மரணத்தை ஆக்குவாயாக!(72)

59. "யாஅல்லாஹ்! நேர்வழியையும் ,உள்ளச்சத்தையும், கற்பொழுக்கத்தையும், போதுமென்ற மனதையும் தருமாறு நான் உன்னிடம் கேட்கிறேன்" (74)

60. ((யாஅல்லாஹ்! இயலாமை சோம்பல், கோழைத்தனம் கஞ்சத்தனம் வயோதிபம் கப்ரின் வேதனை ஆகியவற்றிலிருந்து உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். யா அல்லாஹ்! எனது உள்ளத்தை தூய்மைப்படுத்தி பயபக்தியை தந்தருள்வாயாக! நீயே உள்ளத்தை தூய்மைப்படுத்துவோரில் மிகச்சிறந்தவனும் அதன் பொருப்பாளானும் உரிமையாளனுமாக உள்ளாய்.யா அல்லாஹ்! பயனற்ற கல்வியை விட்டும் (உன்னை) பயப்படாத உள்ளத்தை விட்டும் திருப்தியடையாத மனதை விட்டும் ஏற்கப்படாத பிரார்த்தனையை விட்டும் நிச்சயமாக

நான் பாதுகாவல் தேடுகிறேன்)) (74)

61. ((யாஅல்லாஹ்! எனக்கு நேர்வழியைக் காட்டுவாயாக அதில் உறுதியாக நிற்கச் செய்வாயாக! யாஅல்லாஹ் நேர்வழியையும் அதில் உறுதியாக நிற்பதையும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன்)) (75)

62. ((யாஅல்லாஹ்! உனது அருட்கொடைகள் (என்னை விட்டு) நீங்குவதை விட்டும், நீ அருளிய ஆரோக்கியம்; (என்னைவிட்டு) மாறுவதை விட்டும், உனது எதிர்பாராத தண்டனையை விட்டும், உனது அனைத்துக் கோபங்களை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்))(76)

63. ((யாஅல்லாஹ்! நான் செய்தவைகளின் தீங்கை விட்டும் நான் செய்யாதவற்றின் தீங்கை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்)) (77)

64. ((யாஅல்லாஹ்! எனக்கு செல்வத்தையும் சந்ததியையும் அதிகப்படுத்துவாயாக! மேலும் எனக்கு நீ கொடுத்தவற்றில் அபிவிருத்தி செய்வாயாக)) (78)(( எனது வாழ்வை உனக்குக் கட்டுப்பட்டு நடப்பதில் நீடித்து வைப்பாயாக, மேலும் எனது செயலை சிறந்த முறையில் செய்வதற்கு உதவி புரிவாயாக)) ((மேலும் என்னை மன்னித்தருள்வாயாக)) (79)

65. ((அல்லாஹ்வை தவிர வணக்கத்திற்குரிய உண்மையான இறைவன் வேறு யாரும் இல்லை. அவன் மகத்தானவன் மிகவும் சாந்தம் உடையவன். வணக்கத்திற்குரிய உண்மையான இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை அவன் மகத்தான அர்ஷின் அதிபதி! அல்லாஹ்வை தவிர உண்மையான வணக்கத்திற்குரிய இறைவன வேறு யாருமில்லை.அவனே வானங்களுக்கும் பூமிக்கும் அதிபதி சங்கைமிகு அர்ஷின் அதிபதியும் ஆவான்)) (80)

66. ((யா அல்லாஹ்! நான் உனது கருணையை எதிர்பார்க்கிறேன். கண் இமைக்கும் அளவு நேரத்திற்கு கூட நீ என்னை(உன் பொறுப்பிலிருந்து) என் பொறுப்பில் விட்டு விடாதே! என் விவகாரங்கள் அனைத்தையும் எனக்காக நீ சீர்படுத்துவாயாக! உண்மையான வணக்கத்திற்குரிய இறைவன் உன்னை தவிர யாருமில்லை)) (81)

67. "உன்னைத் தவிர உண்மையான வணக்கத்திற்கு உரிய இறைவன் வேறொருவனும் இல்லை நீ மிகப் பரிசுத்தமானவன். நிச்சயமாக நானோ அநியாயக்காரர்களில் ஒருவனாகி விட்டேன்" (82

68. ((யாஅல்லாஹ்! நிச்சயமாக நான் உனது அடிமை. உனது அடிமையினதும் உனது அடிமைப் பெண்ணினதும் மகன். எனது முன்நெற்றி உன் கைவசம் உள்ளது. உனது தீர்ப்பே என்னில் செயல்படுகிறது. என் மீதான உன் தீர்ப்பு மிகவும் நீதியானது. உனக்கு நீயே சூட்டிக்கொண்ட அல்லது உனது வேதத்தில் நீ இறக்கியருளிய அல்லது உனது படைப்பினங்களில் ஒருவருக்கு (நபிக்கு) நீ கற்றுக் கொடுத்த அல்லது உனது மறைவான ஞானத்தில் நீயே தேர்ந்தெடுத்துக் கொண்ட உன்னுடைய அனைத்துப் பெயர்களின் பொருட்டால் கேட்கிறேன். (இறைவா!) குர்ஆனை என் உள்ளத்திற்கு வசந்தமாகவும், நெஞ்சத்தின் பிரகாசமாகவும், கவலையை நீக்கக்கூடியதாகவும் துன்பத்தை போக்கக் கூடியதாகவும் ஆக்குவாயாக)) (83)

69. ((யாஅல்லாஹ்! உள்ளங்களை திருப்பக் கூடியவனே! எங்கள் உள்ளங்களை உனது வழிபாட்டின் பக்கம் திருப்புவாயாக!)) (84)

70. ((உள்ளங்களை நிலைமாறச் செய்பவனே எனது உள்ளத்தை உனது மார்க்கத்தில் நிலைப்படுத்திவைப்பாயாக))85

71. "யா அல்லாஹ்! இம்மையிலும் மறுமையிலும் யகீன் எனும் மன உறுதியையும், மன்னிப்பையும், ஈடேற்றத்தையும் தருமாறு நான் உன்னிடம் கேட்கிறேன்" (86)

72. ((யாஅல்லாஹ்! எங்களுடைய அனைத்து காரியங்களின் முடிவுகளையும் சிறந்ததாக ஆக்கிவைப்பயாக! இவ்வுலகின் இழிவை விட்டும் மறுவுலகின் வேதனையை விட்டும் எங்களை காத்தருள்வாயாக!)) (87)

73. ((யாஅல்லாஹ்! எனக்கு (நற்காரியங்களை செய்வதற்கு) உதவி செய்வாயாக! எனக்கு எதிராக(நற்காரியங்களை தடுக்கின்றவர்களுக்கு) உதவி செய்யாதிருப்பாயாக! தீய எண்ணங்களை தூண்டும் உள்ளத்தையும் மனோ இச்சையையும் வெற்றி கொள்ள எனக்கு உதவி செய்வாயாக! தீய எண்ணங்களும் மனோ இச்சையும்

என்னை மிகைத்து வெற்றி கொள்ள எனக்கு பாதகமாக உதவி செய்யாதிருப்பாயாக! எனக்குதவியாக சூழ்ச்சி செய்வாயாக! எனக்கு பாதகமாக சூழ்ச்சி செய்யாதிருப்பாயாக! எனக்கு நேர்வழியை காட்டுவாயாக நேர்வழியை எனக்கு இலகுபத்திடுவாயாக! அத்துமீறி அநீதி இழைப்பவருக்கு எதிராக எனக்கு உதவிசெய்வாயாக! உனக்கு நன்றி செலுத்துபவனாக உன்னை அதிகம் நினைவு கூர்பவனாக உன் மீது அதிக அச்சம் கொள்பவனாக உனக்கு அதிகம் வழிப்படுபவனாக கட்டுப்படுபவனாக அடிபணிபவனாக எல்லா விவகாரகங்களிலும் உன்பக்கம் சார்ந்திருப்பவனாக என்னை ஆக்குவாயாக! எனது இரட்சகனே! எனது பாவமன்னிப்பை ஏற்றுக் கொள்வாயாக எனது பாவங்களை போக்கிடுவாயாக எனது பிரார்த்தனைக்கு பதிலளிப்பாயாக! எனது ஆதாரங்களை உறுதிபெறச்செய்வாயாக! எனது நாவை பலப்படுத்துவாயாக!எனது உள்ளத்திற்கு நேர்வழி காட்டுவாயாக! எனது உள்ளத்தின் குரோதங்களையும் பிறர்மீதான வெறுப்புகளையும் அகற்றிடுவாயாக!))88

74. யாஅல்லாஹ்! உன்னுடைய தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் கேட்ட அனைத்து நல்லவற்றையும் நாங்களும் உன்னிடம் கேட்கிறோம், மேலும் உன்னுடைய தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் பாதுகாவல் தேடிய அனைத்து தீமைகளை விட்டும் நாமும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறோம். நீயே! உதவி செய்பவனும் வழிகாட்டுபவனுமாவாய் அல்லாஹ் விதித்தவற்றிலிருந்து விலகவோ விதிக்காதவற்றை செய்ய சக்தி பெறவோ அவன் துணையின்றி முடியாது.

75. ((யாஅல்லாஹ்! என்னுடைய செவியின் தீங்கை விட்டும், பார்வையின் தீங்கை விட்டும், நாவின் தீங்கைவிட்டும், உள்ளத்தின் தீங்கைவிட்டும், எனது மறையுறுப்பின் தீங்கைவிட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்) (90)

76. ((யாஅல்லாஹ்! வெண்குஷ்டம், பைத்தியம், தொழுநோய் மற்றும் பிற தீயநோய்கள் ஆகிய அனைத்தை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்)) (91)

77. யாஅல்லாஹ்! வெறுக்கத்தக்க குணங்கள், தீயசெயல்கள், இச்சைகள்

ஆகியவற்றை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.

78. யாஅல்லாஹ்! நிச்சயமாக நீயே அதிகம் மன்னிப்பவன் பெரும் கொடையாளன் நீ மன்னிப்பை விரும்புகின்றாய் எனவே என்னை மன்னித்தருள்வாயாக (93)

79. ((யாஅல்லாஹ்! நான் நல்லறங்களை செய்யவும் தீமைகளை விட்டுவிடவும் ஏழைகளை நேசிக்கவும் நல்லருள்புரியுமாறும் மேலும் என்னை நீ மன்னித்து இரக்கம் காட்டுமாறும் கேட்கிறேன். நீ ஏதேனும் ஒரு சமூகத்தினரை சோதிக்க நாடி அச்சோதனைக் குள்ளாக்கப்படாதவனாக என் உயிரைக் கைப்பற்றி விடுமாறும் உன்னிடம் கேட்கிறேன். உனது நேசத்தையும் நீ நேசிப்போரின் நேசத்தையும் உனது நேசத்தின் பக்கம் நெருக்கி வைக்கும் செயல்களை நேசிப்பதையும் உன்னிடம் கேட்கிறேன்))94

80. ((யாஅல்லாஹ்! நான் அறிந்திருக்கின்ற நான் அறியாத அனைத்து நன்மையானவற்றையும் இவ்வுலகிலும் மறுமையிலும் தருமாறு உன்னிடன் வேண்டுகிறேன். மேலும்; நான் அறிந்துள்ள நான் அறியாது இருக்கின்ற அனைத்து தீமைகளிலிருந்தும் இவ்வுலகிலும் மறுமையிலும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். யாஅல்லாஹ்! உன்னுடைய அடியாரும் நபியுமாகிய முஹம்மத் (ஸல்) அவர்கள் வேண்டிய நன்மையான விடயங்களை உன்னிடம் கேட்கிறேன். மேலும் உன்னுடைய அடியாரும் நபியுமாகிய முஹம்மத் (ஸல்) அவர்கள் உன்னிடம் (பாதுகாப்புத் தேடிய) தீங்குகளிலிருந்தும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். யாஅல்லாஹ்! நான் சுவனத்தையும் அதன்பால் நெருக்கிவைக்கும் சொல்லையும் செயலையும் கேட்கிறேன். மேலும் நான் உன்னிடம் நரகிலிருந்தும் அதன்பால் நெருக்கி வைக்கும் சொல் செயல்களை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன் மேலும் எனக்கு நீ நிர்ணயித்துள்ள விதிகள் அனைத்தையும் நல்லதாக்கி தருமாறும் கேட்கிறேன்))(95)

81. யாஅல்லாஹ்! நான் நிற்கும்போதும் அமர்ந்திருக்கும் போதும் உறங்கும் போதும் இஸ்லாத்தைக் கடைப்பிடித்து நடப்பவனாக என்னை நீ

ஆக்குவாயாக! மேலும் என்னை விரோதி மற்றும் பொறாமைக்காரனின் நகைப்பிற்கு ஆட்படுத்தாதிருப்பாயாக! யாஅல்லாஹ்! உன் கைவசம் உள்ள பொக்கிஷங்களில் நல்லவை அனைத்தையும் நான் உன்னிடம் கேட்கிறேன். மேலும் உன் கைவசமுள்ள பொக்கிஷங்களில் தீயவை அனைத்தைவிட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (96)

82. யாஅல்லாஹ்! உனக்கு மாறுசெய்வதை விட்டும் எங்களை தடுக்கக் கூடியவைகளை எமக்குத் தருவாயாக உன்னைப் பற்றிய அச்சத்தையும் உன்னுடைய சுவனததைப் பெற்றுத்தரும் வழிபாட்டையும் தருவாயாக! உலக சோதனைகளை எளிதாகக் கருதச் செய்யும் யகீன் எனும் மன உறுதியையும் எமக்குத் தருவாயாக! யா அல்லாஹ்! எங்களுடைய செவிப் புலன்களையும் பார்வைகளையும் (உடல்) சக்திகளையும் நீ எங்களை உயிர் வாழ வைக்கும் காலம் வரையில் சிறந்த முறையில் உனக்கு வழிப்படுவதில் ஆக்கிவிடுவாயாக! அதனை எங்கள் வாரிசுகளுக்கும் கொடுத்திடுவாயாக! எங்களுக்கு அநீதம் செய்தவர்களைப் பழி வாங்குவாயாக! எங்கள் மீது விரோதம் கொண்டவர்களுக்கு எதிராக எங்களுக்கு நீ உதவிசெய்வாயாக! எங்களுடைய மார்க்கத்தில் எங்களுக்கு சோதனைகளை ஏற்படுத்தாதிருப்பாயாக! இவ்வுலகையே எங்கள் இலட்சியமாகவும் எங்கள் அறிவின் குறிக்கோளாகவும் ஆக்காதிருப்பாயாக! எங்கள் மீது கருணைகொள்ளாதவரை பொருப்பாளாராய் சாட்டிவிடாதிருப்பாயாக! (97)

83. யாஅல்லாஹ்! கோழைத்தனத்தை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். மேலும் கஞ்சத்தனத்தை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். இன்னும் தள்ளாத வயதுவரை உயிர் வாழ்வதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். உலகின் சோதனை, கப்ரின் வேதனை ஆகிய அனைத்தை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன் (98)

84. யாஅல்லாஹ்! என்னுடைய குற்றங்களையும் அறியாமையால் விளைந்த என்னுடைய தவறுகளையும் என்னுடைய செயல்களில் நான் வரம்பு மீறியதையும் என்னைப்பற்றி நீ நன்கறிந்த எனது

தவறுகளையும் மன்னித்தருள்வாயாக நான் வேடிக்கையாகவோ வேண்டுமென்றோ மனமுரண்டாகவோ செய்தவைகளையும் மேலும் என்னிடம் உள்ள அனைத்துப் பாவங்களை-விட்டும் உன்னிடம் மன்னிப்புக் கோருகிறேன். (99)

85. யாஅல்லாஹ்! நானே எனக்கு மிக அதிகமாக அநீதி இழைத்துக் கொண்டேன் உன்னைத் தவிர எனது பாவங்களை மன்னிக்க வேறு யாருமில்லை எனவே உன் பேரருளால் என்னை மன்னித்து கருணை காட்டுவாயாக! நிச்சயமாக நீயே மிகப் பெரும் மன்னிப்பாளனாயும் கருணையாளனுமாய் உள்ளாய் (100)

86. ((யாஅல்லாஹ்! நான் உனக்கே அடிபணிந்துள்ளேன் உன்னையே விசுவாசித்துள்ளேன்; உன் மீதே எனது பொறுப்புக்கள் யாவற்றையும் ஒப்படைத்துள்ளேன், உன்பக்கமே மீண்டுள்ளேன், உனக்காகவே போராடுகிறேன். யாஅல்லாஹ்! உண்மையான வணக்கத்திற்குரியவன் உன்னைத்தவிர வேறுயாருமில்லை. உன்னுடைய கண்ணியத்தின் பொருட்டால் நான் வழிதவறிச் சென்றுவிடாதிருக்க நிச்சயமாக நான் உன்னிடமே பாதுகாவல் தேடுகிறேன். மனித, ஜின் இனத்தினர் மரணித்துவிடுபவர்களாய் இருக்கும் நிலையில் நீயே மரணிக்காத நித்திய ஜீவனாவாய் (101)

87. யாஅல்லாஹ்! உனது அருளைப் பெற்றுத்தரும் செயல்களையும் உனது மன்னிப்பை பெற்றும் தரும் உறுதியான விடயங்களையும் உன்னிடம் கேட்கின்றோம். மேலும் பாவங்களை விட்டு பாதுகாப்பையும் அனைத்து நல்லறங்களின் பிரதி பலன்களையும் சுவனவெற்றியையும் நரகை விடுதலையையும் உன்னிடம் கேட்கின்றோம் (102)

88. யா அல்லாஹ் முஃமினான ஆண்கள் பெண்களின் பாவங்களை மன்னிப்பாயாக (103)

89. யாஅல்லாஹ்! என்னுடைய பாவத்தை மன்னிப்பாயாக! என்னுடைய வதிவிடத்தை எனக்கு விசாலமானதாக ஆக்கத்தருவாயாக! எனக்களித்துள்ள வாழ்வாதாரங்களில் அபிவிருத்தி செய்வாயாக!

90. யாஅல்லாஹ்!; நிச்சயமாக நான் உன்னுடைய அருட்கொடையிலிருந்தும் உன்னுடைய கருணையிலிருந்தும் தருமாறு உன்னிடம் கேட்கிறேன்.

ஏனெனில் இவைகளை நீ மாத்திரம்தான் சொந்தமாக வைத்துள்ளாய் (105)

91. யாஅல்லாஹ்! தள்ளாத வயதை அடைவதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். உயரத்திலிருந்து கீழே விழுந்தோ, இடிபாடுகளுக்குள் சிக்கியோ, மிகப் பெரும் சோகத்தினாலோ, நீரில் மூழ்கியோ, தீயினால் எரிந்தோ இறப்பதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். மேலும் மரண நேரத்தில் ஷைத்தான் என்னை நிலை தடுமாறச் செய்வதை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். உன்னுடைய பாதையில் (போர் செய்யும்போது) புறமுதுகு காட்டி ஓடி மரணிப்பதை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (விஷ ஜந்துக்களால்) தீண்டப்பட்டு இறப்பதை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். (106)

92. யாஅல்லாஹ்! பட்டினியை விட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். ஏனெனில் நிச்சயமாக அது நிம்மதியைக் கெடுக்கும் மிகக்கொடிய விடயமாகும். மேலும் மோசடி செய்வதை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். ஏனெனில் நிச்சயமாக அது மிகக்கொடிய நம்பிக்கை துரோகமாகும். (107)

93. யாஅல்லாஹ்! இயலாமை, சோம்பல், கோழைத்தனம், கஞ்சத்தனம், தள்ளாத வயது, கல்நெஞ்சம், அலட்சியம், கையறுநிலை, இழிவு, ஏழ்மை ஆகியவைகளை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். மேலும் வறுமை, இறை நிராகரிப்பு, பாவச்செயல், பிளவை ஏற்படுத்துதல், நயவஞ்சகம், பிறர் புகழ்வதற்காக செயல் படல்; முகஸ்த்துதி- ஆகியவைகளை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன். காதுகேளாமை, பேசமுடியாமை, பைத்தியம், தொழுநோய், வெண் குஷ்டம் மற்றும் பயங்கரமான நோய்களை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன், (108)

94. யா அல்லாஹ்! வறுமை -பட்டினி- பற்றாக்குறை, இழிவு ஆகியவற்றை விட்டும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். நான் பிறருக்கு அநீதி இழைப்பதை விட்டும் பிறரின் அநீதிக்கு இலக்காவதை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத்தேடுகிறேன்.(109)

95. யா அல்லாஹ்! (நான்) நிரந்தரமாக வசிக்கும் இடத்தின் தீய அண்டை வீட்டாரை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். ஏனெனில் தங்கிச்செல்லும் நாடோடி அண்டை வீட்டார் நகர்ந்து விடுபவர்கள். (110

96. யாஅல்லாஹ்! (உனக்குப்) பயப்படாத உள்ளம், ஏற்றுக் கொள்ளப்படாத பிரார்த்தனை, திருப்தி அடையாத மனம், பயனளிக்காத கல்வி ஆகிய நான்கு விடயங்கை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன் (111)

97. யாஅல்லாஹ்! தீய நாளைவிட்டும், தீய இரவை விட்டும், தீய நேரத்தை விட்டும், தீய நண்பர்களை விட்டும் மற்றும் (நான்) நிரந்தரமாக வசிக்கும் இடத்தில் தீய அண்டை வீட்டாரை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். (112)

98. ((யாஅல்லாஹ்! நிச்சயமாக நான் உன்னிடம் சுவனத்தைக் கேட்கிறேன். மேலும் நரகத்தை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்))(மூன்று முறை) (113)

99. ((யாஅல்லாஹ் எனக்கு மார்க்கத்தில் விளக்கத்தைத் தருவாயாக )) (114)

100.((யாஅல்லாஹ்! நான் அறிந்த நிலையில் உனக்கு இணைவைப்பதை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். நான் அறியாமல் செய்தவற்றிற்காக உன்னிடம் பாவமன்னிப்புக் கோருகிறேன் ))(115)

101. ((யாஅல்லாஹ்! எனக்கு நீ கற்றுக் கொடுத்தவற்றை எனக்கு பயனுள்ளதாக ஆக்கிவைப்பாயாக! எனக்கு பயனளிப்பவற்றைக் கற்றுத் தருவாயாக! மேலும் என்னுடைய அறிவை அதிகப்படுத்திடுவாயாக ))(116)

102.((யாஅல்லாஹ்! பயனளிக்கும் கல்வியையும் (ஹலாலான) தூய்மையான உணவையும், ஏற்றுக்கொள்ளப்படும் நல்லறத்தையும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன்)) (117)

103.((யாஅல்லாஹ்! நிச்சயமாக நீ தனித்தவன். ஒருவன்,எவ்விதத் தேவையற்றவன் எவறையும் பெறவுமில்லை எவறுக்கும் பிறக்கவும் இல்லை உனக்கு யாரும் நிகரில்லை என்பதனை முன்னிறுத்தி

கேட்கிறேன். யாஅல்லாஹ்! என்னுடைய பாவங்களை மன்னிக்க வேண்டுமென கோருகிறேன். நிச்சயமாக நீயே மிகப் பெரும் மன்னிப்பாளனாயும் கருணையாளனுமாய் உள்ளாய்)) (118)

104.((யாஅல்லாஹ்! நிச்சயமாக சர்வ புகழும் உனக்கே உரியது அதனை முன்னிறுத்தி உன்னிடம் கேட்கிறேன். உன்னைத் தவிர உண்மையான வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை நீ தனித்தவன் இணையில்லாதவன் பெரும் கொடையாளன் வானங்களையும் பூமியையும் எவ்வித முன்மாதிரியின்றி படைத்தவனே! வல்லமை மிக்கவனே! கண்ணியத்திற்குரியவனே! நித்தியஜீவனே! என்றும் நிலைத்திருப்பவனே! நிச்சயமாக நான் உன்னிடம் சுவனத்தைக் கேட்கிறேன் மேலும் நரகைவிட்டும் உன்னிடம் பாதுகாப்பும் தேடுகிறேன் ))(119)

105.((யாஅல்லாஹ்! நிச்சயமாக நீயே அல்லாஹ்! உண்மையான வணக்கத்திற்குரியவன் உன்னைத்தவிர வேறு யாருமில்லை, நீ தனித்தவன், எவ்விதத் தேவையுமற்றவன், எவரையும் பெறவுமில்லை, எவருக்கும் பிறக்கவும் இல்லை, உனக்கு நிகராக யாருமில்லை என நான் சாட்சி கூறுவதன் மூலம் நான் உன்னிடம் (என் தேவைகளைக் நிறைவேற்றுமாறு) கேட்கிறேன்))(120)

106.((எனது இரட்சகனே! என்னை மன்னிப்பாயாக! என்னுடைய பாவ மன்னிப்பை ஏற்றுக் கொள்வாயாக! நிச்சயமாக நீயே மன்னிப்பை ஏற்றுக்கொள்பவனாகவும் பெரும் மன்னிப்பாளனுமாய் உள்ளாய்)) (121)

107. ((யாஅல்லாஹ்! உன்னுடைய மறைவானஞானம் மற்றும் படைப்பினங்கள் மீதுள்ள உனது ஆற்றல் ஆகியவற்றின் மூலம் கேட்கிறேன், நான் வாழ்வது எனக்கு சிறந்தது என்று நீ அறிந்திருந்தால் என்னை வாழவைப்பாயாக! நான் இறப்பதுதான் எனக்கு சிறந்தது என்று நீ அறிந்திருந்தால் என்னை மரணிக்கச் செய்வாயாக! யா அல்லாஹ்! நான் வெளிப்படையிலும் மறைவிலும் உன்னைப் அஞ்சி நடக்க உன்னிடம் கேட்கிறேன், விருப்பிலும் வெறுப்பிலும் உண்மையைப் பேச எனக்கு உதவி செய்யுமாறு உன்னிடம் கேட்கிறேன், மேலும் வறுமையிலும் செழிப்பிலும் நடுநிலையோடு

நடந்து கொள்ளவதை நான் உன்னிடம் கேட்கிறேன், மேலும் முடிவுறாத அருட்கொடையை உன்னிடம் கேட்கிறேன், இடைநிறுத்தப்படாத கண் குளிச்சியைத் தருமாறும் உன்னிடம் கேட்கிறேன், உனது தீர்ப்புக்குப் பின்னால் விதியை திருப்தியோடுஏற்றுக் கொள்ளும் நிலையை நான் கேட்கிறேன், மரணத்திற்குப் பின் குளிர்ந்த சுவன வாழ்வையும் உன்னிடம் கேட்கிறேன், மேலும் வழி கேட்டின் குழப்பத்திலும் தீயவிளைவைத்தரும் செயலிலும் ஈடுபட்டு விடாது உன்னை சந்திப்பதின் ஆசையையும், உன் திருமுகத்தைப் பார்ப்பதில் இன்பத்தையும் தருமாறு உன்னிடம் கேட்கிறேன். யாஅல்லாஹ்! ஈமானின் அலங்காரத்தால் எங்களை அலங்கரிப்பாயாக! எங்களை நேர்வழி பெற்றோரின் வழியில் ஆக்குவாயாக)) (122)

108.((யாஅல்லாஹ்! எனக்கு உன்னுடைய அன்பையும், யாரின் அன்பு உன்னிடம் எனக்குப் பயனளிக்குமோ அவரின் அன்பையும் எனக்குத் தந்தருள்வாயாக! யாஅல்லாஹ்! நான் விரும்பியதை நீ எனக்கு தந்துள்ளாய், எனவே நீ விரும்பும் செயல்களில் நான் ஈடுபட எனக்கு வலுவூட்டக் கூடியதாக அதனை ஆக்குவாயாக! யாஅல்லாஹ்! நான் விரும்பியதை நீ தடுத்துவிட்டாய், எனவே நீ விரும்பும் செயல்களில் ஈடுபடுவதற்கு அந்த இடைவெளியை வாய்ப்பாயாக எனக்கு ஆக்குவாயாக!)) (123)

109.யாஅல்லாஹ்! பாவங்களிலிருந்தும் தவறுகளிலிருந்தும் என்னைத் தூய்மைப் படுத்துவாயாக! யாஅல்லாஹ்! அழுக்கிலிருந்து வெள்ளைத் துணியைத் தூய்மைப்படுத்தப்படுவதைப் போல் என்னை இவற்றிலிருந்து தூய்மைப்படுத்துவாயாக! யாஅல்லாஹ்! ஆழம்கட்டி பனிக்கட்டி குளிர்ந்த நீர் ஆகியவைகளைக் கொண்டு என்னை தூய்மைப் படுத்துவாயாக! (124)

110. ((யாஅல்லாஹ்! கஞ்சத்தனம, கோழைத்தனம், தள்ளாத வயது, மனக் குழப்பம், மண்ணறை வேதனை ஆகியவைகளை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன் ))(125)

111. ((யாஅல்லாஹ்! ஜிப்ரீல் மற்றும் மீகாயீல், இஸ்ராஃபீல் ஆகியோரின் இரட்சகனே! நரக வெப்பத்திலிருந்தும் மண்ணறை வேதனை

யிலிருந்தும்; நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்)) (126)

112. ((யாஅல்லாஹ்! எனக்கு நேரான பாதையை மனதில் உதிக்கச் செய்வாயாக! மேலும் என்னுடைய மனதின் தீங்கிலிருந்து என்னைபாதுகாப்பாயாக!))(127)

113. ((யாஅல்லாஹ்! நிச்சயமாக நான் உன்னிடம் பயனுள்ள கல்வியைக் கேட்கிறேன், மேலும் பயனளிக்காத கல்வியை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்)) (128)

114. ((யாஅல்லாஹ்! ஏழு வானங்களின் இரட்சகனே! பூமியின் இரட்சகனே! மகத்தான அர்ஷின் இரட்சகனே! எங்கள் இரட்சகனே! அனைத்துப் பொருட்களின் இரட்சகனே! வித்தையும் விதையையும் பிளப்பவனே! தவ்ராத் இன்ஜீல் ஃபுர்கான் (குர்ஆன்) ஆகிய வேதங்களை இறக்கியவனே! அனைத்துப் பொருட்களினதும் தீங்கை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். நீயே அனைத்து படைப்பினங்களினதும் முன்நெற்றியைப்பிடித்து அதிகாரம் செலுத்தக் கூடியவன். யா அல்லாஹ்! நீயே ஆரம்பமானவன் உனக்கு முன்னர் எதுவுமில்லை நீயே இறுதியானவன் உனக்கு பின்னர் எதுவுமில்லை நீயே மேலானவன் உனக்குமேல் எதுவுமில்லை நீயே இப்பிரபஞ்சத்தின் கீழுள்ளவற்றிற்கும் அதிகாரம் படைத்தவன் உனக்கு கீழ் எதுவுமில்லை எங்களுடைய கடனை நிறைவேற்றிவைப்பாயாக ! மேலும் வறுமையை விட்டும் எம்மை பாதுகாத்து தன் நிறைவானவர்களாக ஆக்கிவிடுவாயாக)) (129)

115. ((யாஅல்லாஹ்! எங்கள் உள்ளங்களுக்கிடையில் இணைப்பை ஏற்படுத்திடுவாயாக! எங்களுக்கு மத்தியில் (நட்பை) சீர்படுத்துவாயாக! வெற்றிக்குரிய வழிகளை எங்களுக்கு காட்டு வாயாக! இருள்களிலிருந்து எம்மை பாதுகாத்து ஒளியின் பால் எமக்கு வழிகாட்டுவாயாக! வெளிப்படையான மறைமுகமான அனைத்து மானக்கேடான விஷயங்களை விட்டும் எங்களை நீ தூரப்படுத்திடுவாயாக! எங்கள் செவிப்புலன்களில் பார்வைகளில் உள்ளங்களில் மனைவியர்களில் வாரிசுகளில்; அருள் வளத்தை ஏற்படுத்திடுவாயாக! எங்களை மன்னித்தருள்வாயாக! நிச்சயமாக

நீயே மன்னிப்பவனும் கிருபை செய்பவனுமாவாய். உன்னுடைய அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்துபவர்களாக அதற்காக உன்னை புகழ்பவர்களாக உனது அருட்கொடைகளை ஏற்றுக் கொள்பவர்களாக எங்களை ஆக்குவாயாக! மேலும் எங்களுக்கு (உன்) அருட்கொடைகளை பரிபூரணப் படுத்துவாயாக)) (130)

116. ((யாஅல்லாஹ்! மிகச் சிறந்த வேண்டுதலை மிகச்சிறந்த பிரார்த்தனையை மிகச்சிறந்த வெற்றியை உன்னிடம் நிச்சயமாக கேட்கிறேன். மேலும் மிகச்சிறந்த நற்செயலையும் மிகச்சிறந்த நற்கூலியையும் மிகச்சிறந்த வாழ்வையும் மிகச்சிறந்த மரணத்தையும் தருமாறு நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன். என்னை நீ இம்மார்க்கத்தில் உறுதிப்படுத்துவாயாக! (மறுமை நாளில்) என்னுடைய தராசைக் கனதியானதாக ஆக்குவாயாக! என்னுடைய ஈமானை பலப்படுத்துவாயாக! மேலும் என்னுடைய நற்பெயரை உயர்த்துவாயாக! என்னுடைய தொழுகையை ஏற்றுக்கொள்வாயாக! என்னுடைய தவறுகளை மன்னிப்பாயாக! மேலும் நான் உன்னிடம் சுவர்க்கத்தின் அந்தஸ்துக்களில் உயர்ந்த அந்தஸ்த்தைக் கேட்கிறேன். யாஅல்லாஹ்! சிறந்த துவக்கங்களையும், நல்ல முடிவுகளையும், அனைத்து நல்லவைகளையும்அதன் ஆரம்பத்தையும் நான் உன்னிடம் கேட்கிறேன். மேலும் வெளிப்படையான அந்தரங்கமானநல்லறங்களையும் உன்னிடம் வேண்டுகிறேன். இன்னும் சுவர்க்கத்தின் அந்தஸ்த்துக்களின் உயர்ந்த அந்தஸ்துகளையும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன் (யா அல்லாஹ் எனது பிரார்த்தனையை) ஏற்றுக் கொள்வாயாக! யாஅல்லாஹ்! நிச்சயமாக நான் செய்வதற்கு முனையும் விடயங்களில் மிகச்சிறந்ததையும் நான் ஈடுபடும் செயல்களில் மிகச்சிறந்ததையும் நான் ஆற்றும் கருமங்களில் மிகச்சிறந்ததையும் உன்னிடம் கேட்கிறேன். நல்லவற்றைச்செய்யவும் அந்தரங்கம் மற்றும் வெளிப்படையான அனைத்து நல்லவைகளையும் சொர்க்கத்தில் உயர்ந்த அந்தஸ்துகளையும் கேட்கிறேன்.ஏற்றுக் கொள்வாயாக! யாஅல்லாஹ்! எனது அந்தஸ்த்தை உயர்த்துமாறு வேண்டுகிறேன்

என்னுடைய பாவத்தை மன்னிக்குமாறும் வேண்டுகிறேன் என்னுடைய விவகாரத்தை சீராக்குமாறும் என்னுடைய உள்ளத்தை தூய்மைப்படுத்துமாறும் வேண்டுகிறேன் மேலும் என்னுடைய மறையுறுப்பை (ஹராத்தை விட்டும்) காத்திடுமாறும் என்னுடைய உள்ளத்தை ஒளிமயமாக்குமாறும் என்னுடைய பாவங்களை மன்னிக்குமாறும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன் மேலும் சுவர்க்கத்தில் உயர்ந்த அந்தஸ்துகளையும் கேட்கிறேன் யாஅல்லாஹ்! என்னுடைய உள்ளம் காது பார்வை உயிர் உடல் குணம் குடும்பம் வாழ்வு மரணம் செயல் ஆகிய வற்றில் நீ அபிவிருத்தி செய்யுமாறு நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன். மேலும் என்னுடைய நல்லறங்களை நீ ஏற்றுக் கொள்வாயாக! சுவர்க்கத்தின் உயர் அந்தஸ்துகளைக் கேட்கிறேன் ஏற்றுக்கொள்வாயாக)) (131)

117. ((யாஅல்லாஹ்! துர்குணங்கள், மனோஇச்சைகள், தீச்செயல்கள், பயங்கரமான நோய்கள் ஆகியவைகளிலிருந்து என்னை நீ காத்தருள்வாயாக)) (132)

118. ((யாஅல்லாஹ்! நீ எனக்கு அளித்த வாழ்க்கை வசதிகளில் மனநிறைவை தந்து அதில் எனக்கு அபிவிருத்தியும் செய்வாயாக! என்னை விட்டும் தவறிப்போன அனைத்து அருள்களுக்கும் அதைவிட சிறந்தவற்றை எனக்குத் பகரமாகத் தந்தருள்வாயாக!))(133)

119. ((யாஅல்லாஹ்! என்னை (மறுமையில்) மிகவும் இலகுவாக விசாரிப்பாயகாக ! ))(134)

120. ((யா அல்லாஹ் உன்னை நினைவு கூறவும் உனக்கு நன்றி செலுத்தவும் அழகிய முறையில் வணங்கவும் எமக்கு உதவி செய்வாயாக! ))(135)

121. ((யா அல்லாஹ் நிலைமாறா விசுவாசத்தையும், தீர்ந்து விடாத அருளையும், அதி உயர் சுவனத்தில் நபியவர்களுடன் சேர்ந்திருக்கவும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன்))(136)

122. (யா அல்லாஹ்! என் உள்ளத்தின் தீங்கிலிருந்து என்னைப் பாதுகாப்பாயாக! எனது காரியத்தில் மிகச் சிறந்ததில் எனக்கு உறுதியைத் தருவாயாக! யா அல்லாஹ் !நான் இரகசியமாகச் செய்தவைகளையும் வெளிப்படையாகச் செய்தவைகளையும்

தவறுதலாக செய்தவைகளையும் வேண்டுமென்று செய்தவைகளையும் நான் அறிந்து செய்ததையும் நான் அறியாது செய்ததையும் மன்னித்தருள்வாயாக! ))(137)

123. (( யா அல்லாஹ் ! கடன் மிகைப்பதை விட்டும், எதிரிகள் மிகைப்பதை விட்டும், எதிரிகளின் நகைப்பை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். ))(138)

124. ((யா அல்லாஹ்! என்னை மன்னிப்பாயாக மேலும் எனக்கு நேர்வழிகாட்டுவாயாக! எனக்கு வாழ்வாதாரத்தைத் தந்தருள்ளவாயாக! எனக்கு ஆரோக்கியத்தைத் தந்தருள்வாயாக! மறுமை நாளின் நெருக்கடியான நிலையிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறேன்)) (139)

125. ((யா அல்லாஹ் ! எனது செவிப்புலனையும் பார்வையையும் எவ்வித குறையற்றதாக ஆக்கிவைப்பாயாக! அவை இரண்டையும் இறக்கும் வரையில் ஆரோக்கியமானதாக வைத்திடுவாயாக! எனக்கு அநீதி இழைத்தவருக்கு எதிராக எனக்கு உதவி செய்வாயாக மேலும் அநியாயம் இழைத்தவரை எனக்காக பழிவாங்குவாயாக! ))(140)

126. ((யா அல்லாஹ் ! தூய்மையான வாழ்வையும், சீரான மரணத்தையும், கேவலம் இழிவு அற்ற மீளுதலையும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன்)) (141 127- ((யா அல்லாஹ் புகழனைத்தும் உனக்கே சொந்தமானது. யா அல்லாஹ்! நீ வாரி வழங்கியதை யாராலும் மட்டுப்பத்தி விட முடியாது. நீ மட்டுப்படுத்தியதை யாராலும் வாரி வழங்கமுடியாது. நீ வழிகெடுத்தியவரை நேர்வழி காட்டுபவர் உன்னைத் தவிர வேறு யாருமில்லை. நீ நேர்வழி காட்டியவரை வழிகெடுப்பவர் யாருமில்லை. நீ கொடுத்ததை தடுப்பவர் எவருமில்லை. நீ தடுத்ததை கொடுப்பவர் எவருமில்லை. நீ தூரமாக்கியதை சமீபமாக்குபவர் யாருமில்லை. நீ சமீபமாக்கியதைத் தூரமாக்குபவர் யாருமில்லை. யா அல்லாஹ் ! உன்னுடைய அருள்வளங்கள் உன்னுடைய கருணை உன்னுடைய கிருபை உன்னுடைய வாழ்க்கைவசதிகள் அனைத்தையும் எங்களுக்கு வாரி வழங்கிடுவாயாக! யாஅல்லாஹ்! எவ்வித மாற்றமும் ஏற்படாத அழிந்து விடாத நிரந்தரமான சுவனத்தை நிச்சயமாக நான்

உன்னிடம் கேட்கிறேன். யா அல்லாஹ்! பயங்ரம் நிறைந்த மறுமை நாளின் இன்பத்தையும் அச்சம் நிறைந்த நாளின் பாதுகாப்பையும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன். யாஅல்லாஹ்! நீ எங்களுக்குக் கொடுத்தவற்றின் தீங்கை விட்டும் எங்களுக்கு தடுத்தவைகளின் தீங்கை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன் யா அல்லாஹ் எங்களுக்கு ஈமானை நேசத்திற்குரியதாகவும் அதனை எங்கள் உள்ளங்களில் அலங்காரமாயும் ஆக்கித்தந்தருள்வாயாக! மேலும் இறை நிராகரிப்பையும் பாவம் செய்வதையும் மாறு செய்வதையும் வெறுப்பானதாக ஆக்கிவிடுவாயாக! மேலும் நேர்வழிபெற்றவர்களில் எங்களையும் ஆக்கிவிடுவாயாக யாஅல்லாஹ்! எங்களை முஸ்லிம்களாக மரணிக்கச் செய்து முஸ்லிம்களாகவே எங்களை மீண்டும் எழுப்புவாயாக! இழிவு மற்றும் சோதனைக்குற்பட்டோரில் அல்லாது நல்லோர்களுடன் எங்களைச் சேர்த்து வைப்பாயாக! யாஅல்லாஹ்! உனது தூதரைப் பொய்ப்பிக்கும் உன் வழியை விட்டும் (மக்களைத்) தடுக்கும் காஃபிர்களைக் அழித்துவிடுவாயாக உனது தண்டனையையும் வேதனையையும் அவர்கள் மீது இறக்கி விடுவாயாக! யா அல்லாஹ்! வேதம் கொடுக்கப்பட்ட இறைநிராகரிப்பாளர்களை அழித்து விடுவாயாக! உண்மையான இறைவனே! எனது இந்தப் பிரார்த்தனையை ஏற்றுக்கொள்வாயாக!))(142)

127. ((யா அல்லாஹ் ! என்னை மன்னித்து எனக்கு அருள்புரிந்து நேர்வழிகாட்டுவாயாக! மேலும் எனக்கு ஆரோக்கியத்தைத்தந்து வாழ்வாதாரத்தையும் தந்திடுவாயாக ))(143)

128. (( என்குறைகளை மறைத்து (எனக்கு ஆறுதலைத் தந்திடுவாயாக) மேலும் எனது நிலையை உயர்த்திடுவாயாக!))(144)

129. (( யா அல்லாஹ் உனது அருட்கொடைகளை குறைக்காது எங்களுக்கு அதிகப்படுத்திடுவாயாக! எங்களை இழிவுபடுத்திடாது எம்மை கண்ணியப்படுத்துவாயாக! எங்களுக்கு உனது கொடைகளை தடுக்காது தாராளமாக வழங்கிடுவாயாக! எங்களை பெரும் சிறப்புக்குரியோராக தெரிவு செய்வாயாக எம்மை விடவும் எமது எதிரிகளை சிறப்புக்குரியோராக தெரிவு செய்யாமல் இருப்பாயாக!

எம்மையும் உன்னைப் பொருந்திக்கொள்பவர்களாக்கி எம்மையும் நீ பொருந்திக்கொள்வாயாக)) (145)

130.((யா அல்லாஹ் ! எனது தோற்றத்தை (உருவத்தை) அழகாக்கியுள்ளாய் ஆகவே எனது குணத்தையும் அழகுபடுத்திடுவாயாக! ))(146)

131. ((யா அல்லாஹ் என்னை இம்மார்க்கத்தில் ஸ்திரப்படுத்துவாயாக! மேலும் நேர்வழிப்பெற்றவனாகவும் நேர்வழியைக் காட்டுபவனாகவும் ஆக்குவாயாக)) (147)

132.(( யா அல்லாஹ் மார்க்க விடயத்தில் ஸ்திரத்தன்மையையும் நல்ல விடயங்களில் மன உறுதியையும் உன்னிடம் கேட்கிறேன். மேலும் உனது அருளைப் பெற்றுத்தரும் செயல்களையும் உனது மன்னிப்பை பெற்றும் தரும் உறுதியான விடயங்களையும் உன்னிடம் கேட்கின்றேன். உனது அருட்கொடைக்கு நன்றி செலுத்தவும் நல்ல முறையில் வணங்கிடவும் உன்னிடம் உதவி கேட்கிறேன். மேலும் சீரான உள்ளத்தையும் உண்மைபேசும் நாவையும் தந்தருளுமாறு கேட்கிறேன். நீ அறிந்த வற்றில் சிறந்ததை கேட்கிறேன். நீ அறிந்த தீயவைகளிலிருந்து என்னைப் பாதுகாக்குமாறும் கேட்கிறேன். நீ அறிய நான் செய்த பாவங்களுக்கு மன்னிப்புக் கோருகிறேன். நீயே மறைவான யாவற்றையும் மிக அறிந்தவானாய் உள்ளாய் )) (148)

133.133- ((யா அல்லாஹ் சுவனத்தில் மிக உயர்ந்த சுவர்க்கமாகிய ஜன்னத்துல் பிர்தவ்ஸை தருமாறு கேட்கிறேன்)) (149)

134. (( யா அல்லாஹ் எனதுள்ளத்தில் ஈமானை புதிதானதாய் ஆக்கி புத்துயிர்ப்பளிப்பாயாக )) 150

135.(( யா அல்லாஹ்! பயனற்ற தொழுகையை விட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன் )) (151)

136.(( யா அல்லாஹ் தீய அண்டை விட்டாரை விட்டும் முதுமை வருமுன் முதுமையை ஏற்படுத்தும் துணையைவிட்டும், எனக்கெதிராய் அதிகாரம் செலுத்தும் தலைவனாக இருக்கும் பிள்ளையை விட்டும், தொல்லையாய் அமையும் செல்வத்தை விட்டும், என்னையே கண்கானித்து உற்று நோக்கிக் கொண்டிருக்கும் நன்மையான விடயம் ஒன்றை என்னில் கண்டால் மூடி மறைக்கும் தீய விடயமொன்றை

கண்டால் அம்பலப்படுத்திடும் சூழ்சிக்கார நண்பனைவிட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன் ))

137. (( யா அல்லாஹ்! மறுமைநாளில் என்னை இழிவுபடுத்தாதிருப்பாயாக!)) (153)

138.138- ((யா அல்லாஹ் ! இவ்வுலகிலும் மறுமையிலும் ஈடேற்றத்தைத் தருமாறு உன்னிடம் நான் கேட்கிறேன் )) (154)

139. (( யா அல்லாஹ் பயனற்ற அறிவைவிட்டும்(உன்னளவில்) உயர்தப்படாத செயலை விட்டும் அச்சப்படாத உள்ளத்தைவிட்டும் பதிலளிக்கப்படாத வார்த்தையை(கேட்படாத பேச்சை) விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன் )) (155)

140. ((யா அல்லாஹ்!கவலையிலிருந்தும்,துக்கத்திலிருந்தும், இயலாமையிலிருந்தும், சோம்பலிலிருந்தும், உலோபித்தனத்திலிருந்தும், கோழைத்தனத்திலிருந்தும், கடன் சுமையிலிருந்தும், மனிதர்களின் ஆதிக்கம் (அடக்குமுறையிலிருந்தும்) நான் பாதுகாவல் தேடுகிறேன் ))(156)

141. (( யா அல்லாஹ் !நரக வேதனையைவிட்டு உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்.மேலும் மண்ணறை வேதனையை விட்டு நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். இன்னும் வெளிப்படையான மறைமுகமான குழப்பங்களிலிந்து நான் பாதுகாவல் தேடுகிறேன். மேலும் தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்து நான் பாதுகாவல் தேடுகிறேன்)) (157)

142. (( யா அல்லாஹ் உனது பாதையில் வீரமரணம் அடைவதை உன்னிடம் கேட்கிறேன் (158)

143. ((யா அல்லாஹ் என்னை மன்னிப்பாயாக! உனது அதிகமான படைப்பினங்களில் அதிகமான மனிதர்களை விடவும் என்னை மேலானவனாக ஆக்கியருள்வாயாக! யா அல்லாஹ்! எனது பாவங்களை மன்னிப்பாயாக! மறுமை நாளில் கண்ணியமிக்க நுழைவாயிலினூடக என்னை நுழையவைப்பாயாக! (159)

144. ((யா அல்லாஹ்! நீ நேர்வழி காட்டியவர்களுடன் சேர்த்து எனக்கும் நேர்வழி காட்டுவாயாக! நீ ஆரோக்கியம் அளித்தவர்களுடன் சேர்த்து எனக்கும் ஆரோக்கியம் அளிப்பாயாக! நீ பொறுப்பேற்றுக் கொண்டவர்களுடன்

சேர்த்து என்னையும் பொறுப்பேற்றுக் கொள்வாயாக! நீ எனக்குத் தந்திருப்பவற்றில் அபிருத்தி அளிப்பாயாக! நீ விதியாக்கியவைகளில் உள்ள கெடுதியை விட்டும் என்னைக் காப்பாயாக! நிச்சயமாக நீ யாரை நேசித்து விட்டாயோ அவர் இழிவடைய மாட்டார் எங்கள் இறைவா! நீ தூய்மையானவனுமாகவும் கணணியமிககவனுமாய் உள்ளாய் (160)

145.((எனது இரட்சகனே! மறுமை நாளில் எனது தவறுகளை மன்னித்தருள்வாயாக!)) (161)

146.((என்றும் நிலைத்திருப்பவனும் நித்திய ஜீவனுமாகிய உண்மையாக வணங்கப்படத்தகுதியான மகத்தான அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி அவனிடமே மீளுகிறேன்))(162)

147. (( யா அல்லாஹ் எனது பாவங்களை மன்னித்து எனது உள்ளத்தின் கோபத்தை நீக்கிவிடுவாயாக! மேலும் சோதனைகளில் அழிவிற்குடுத்துபவற்றிலிருந்து என்னை பாதுகாப்பாயாக! ))163))

148.((யா அல்லாஹ் என்னை உனது நபியின் வழிமுறையில் உயிர் வாழச் செய்வாயாக! அவரின் மார்க்கத்தில் மரணிக்கச்செய்வாயாக! மேலும் சோதனைகளில் அழிவிற்குடுத்துபவற்றிலிருந்து என்னை பாதுகாப்பாயாக)) (164)

149. ((யா அல்லாஹ்! இப்ராஹீம் (அலை) அவர்கள் மீதும் அருள் புரிந்தது போல்,முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும் அவர்கள் மனைவிமார்,மற்றும் சந்ததிகள் மீதும் அருள்புரிவாயாக. யா அல்லாஹ்!நீ உலகத்தாரில் இப்ராஹீம் )அலை) மீதும் அவரின் குடும்பத்தார் மீதும் உன் அருள்வளத்தையும் செழிப்பையும் அள்ளிப் பொழிந்தது போல் முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தார் மீதும் உன் அருள்வளத்தையும செழிப்பையும் பொழிவாயாக !நீயே புகழுக்குரியவன் கீர்த்திமிக்கவன் ))(165)

சர்வ புகழும் அகிலமனைத்தினதும் இரட்சகனான அல்லாஹ்விற்கே உரியது. அவனின் கண்ணியத்திற்கும் மான்புமிகு அவனது அதிகாரத்திற்கும் தக்க வகையில் அவனைப் புகழ்கின்றேன் எங்கள் நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தார்

தோழர்கள் மீதும் மறுமை வரையில் அவர்களைப் சிறந்த முறையில் பின்பற்றி வாழ்ந்தோர் மீதும் உனது ஸலாத்தையும் ஸலாமையும் பொழிவாயாக